[4th September 1958

**Sri A. GOVINDASAMY :** கேரளத்திலிருந்து தமிழ் நாட்டுப் பகுதிகள் தமிழ் நாட்டுக்கு வந்ததுபோல, பிரெஞ்சுப் பகுதியான புதுவை நம் நாட்டை ஒட்டி இருக்கின்ற காரணத்தினால், அதை நம் நாட்டோடு சேர்க்கவேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு நம் சர்க்கார் சிபாரிசு செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** புதுவை இன்னும் பிரெஞ்சு ஆதிக்கத்தில் இருந்து வருகிறது. அதாவது சட்ட ரீதியாகப் பார்க்கும்போது அது இன்னும் பிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழ்தான் இருந்து வருகின்றது. ஆகையால், இன்னொருவருடைய பொருளை இச்சிக்காமல் இருப்பது நல்லது என்று நினைக்கிறேன்.

**Sri K. VINAYAKAM :** Are the Government aware of the fact that there is, on the other hand, a feeling in Pondicherry that the people living there are not prepared for a merger with the Madras State?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** I am not quite sure about it. It is a very academic question and I do not think it is desirable to discuss it at this stage.

**Sri A. GOVINDASAMY :** கனம் அமைச்சர் அவர்கள் பதிலளிக்கும்போது "இன்னொருவருடைய பொருளை இச்சிக்காமல் இருப்பது நல்லது" என்று சொன்னார்கள். இப்போது புதுவை பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் இருப்பதால் அது பிரெஞ்சுக்காரர்களின் பொருள் என்று அமைச்சர் அவர்கள் கருதுகிறாரா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** சட்ட ரீதியாக இப்போது புதுவை அவர்கள் ஆதிக்கத்தில் இருக்கிறது. அதைப்பற்றி தக்க சமயத்தில் யார் யாருடன் கலந்தாலோசிக்க வேண்டுமோ அவர்களுடன் கலந்தாலோசித்து என்னென்ன முடிவு எடுக்கவேண்டுமோ, அவைகள் எடுக்கப்படும் காலத்தில் எதையும் கவனிக்க வேண்டுமேயல்லாது, தக்க காலத்திற்கு முன்பு கவனிப்பதானது அதிகக் கஷ்டத்தை உண்டாக்கும்.

*Groundnut cultivation*

* 40 *Q.*—**Sri S. LAZAR :** Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the groundnut growing area in Tiruchirappalli and South Arcot districts respectively in 1956–57;

(*b*) the average yield per acre; and

(*c*) the steps taken to improve the yield?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** (*a*) Tiruchirappalli district—157,468 acres.

South Arcot district—336,502 acres.

(*b*) Tiruchirappalli district—664 lb.

South Arcot district—1,505 lb.

(*c*) Improved strains are being multiplied and distributed to the ryots to replace the local varieties. The District Agricultural Officers have been instructed to start suitable State Seed Farms for the multiplication of the seed in adequate quantities. Propaganda is being carried on to bring more area under groundnut. The Japanese method of cultivation of groundnut is also being introduced to achieve the target.

4th September 1958]

**SRI A. GOVINDASAMY :** தென்னாற்காடு மாவட்டத்தில் பொறுக்கு விதைகளை மார்க்கெட்டிங் கமிட்டி மூலம் வழங்கிவந்தார்கள். ஆனால் அது இப்போது நிறுத்தப்பட்டிருக்கிறது. மீண்டும் பொருக்கு விதைகளை வழங்கும் அதிகாரத்தை மார்க்கெட்டிங் கமிட்டிக்கே கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதைப் பற்றித் தனியாகக் கேள்வி போட்டாலும், அல்லது என்னிடம் தெரிவித்தாலும் அதை நான் கவனிக்கிறேன்.

**SRI K. R. VISWANATHAN :** திருச்சி ஜில்லாவிலும், தென்னாற்காடு ஜில்லாவிலும் ஒவ்வொரு ஏக்கரிலும் உண்டாக்கக் கூடிய விதைகளின் அளவில் வித்தியாசம் இருக்கக் காரணம் என்ன ? திருச்சி ஜில்லாவில் குறைந்த அளவில் இருப்பதை அதிகப்படுத்த அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கின்றன ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** முயற்சிகள் எடுத்துக் கொண்டிருப்பதைப் பற்றி என்னுடைய பதிலிலேயே சொன்னேன். நிலத்தின் தரம், விவசாய முறைகள் இவைகளைப் பொருத்துத்தான் இருக்கும் பொறுக்கு விதைகள்.

*Salary of Members of the Legislature*

* 41 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to increase the salary of the Members of the Legislature?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

**SRI K. VINAYAKAM :** Without importing any personal interest in this subject, may I ask whether the Government are aware of the fact that in the midst of a raising cost of living and rising prices, there is every justification for raising the salary of Members?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** It is not our intention that Members should subsist on this salary alone. This salary is intended for the purpose of assisting the Members in their work in their constituencies. For eking out their livelihood, they have to make their own arrangements perhaps by pursuing their professions.

**SRI S. NAGARAJA MONIGAR :** ஸார், தற்போது அமைச்சர் அவர்கள் கூறியதுபோல, அங்கத்தினர்களுடைய தொகுதிக்குள் செய்ய வேண்டிய வேலைக்கு இன்னும் அதிகம் பணம் கிடைத்தால் இன்னும் அதிகமான வேலை செய்ய முடியும் என்று அமைச்சர் கருதி, சம்பளத்தை அதிகப்படுத்த முன் வருவாரா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இப்போது இருக்கக்கூடிய நிதி நிலைமையை அனுசரித்து, இதை அதிகப்படுத்த முடியாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

**SRI N. R. THIAGARAJAN :** "டெய்லி அலவன்ஸாவது" உயர்த்தப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் அங்கத்தினர் அவர்கள் இதைப் பற்றித் தீர்மானம் ஒன்று கொண்டுவந்து, அதை இந்தச் சபையில் ஏகமனதாக நிறைவேற்றினால் அரசாங்கம் கவனிக்கும்